[12th November 1965

(உ) ஏழாயிரத்து நானூற்று நாற்பத்தாறு (7,446) மரங்கள்.

(எ) ஒன்பதாயிரத்து இருநூறு ரூபாய் (ரூ. 9,200).

(ஏ) மூங்கில் மரங்களும் புதர்ச் செடிகளும் மண்டிக் கிடக்கும் பெருஞ் சாணை நீர்ப்பரப்புப் பகுதியில் 4—3—1965-ல் தீப் பிடித்தது. அன்றிரவு தீ அணைக்கப்பட்டு விட்டது. அங்கிருந்து சில தணல் துண்டுகள் காற்றில் ரப்பர்த் தோட்டத்திற்குள் அடித்துச் செல்லப்பட்டிருக்கவேண்டும். இதனால் 5—3—1965 விடியற்காலையில் ரப்பர்த் தோட்டத்திற்குள் தீப் பிடித்திருக்கவேண்டும். 6—3—1965-ல் ஏற்பட்ட தீ விபத்திற்கு யாரோ சிலருடைய குறும்புத்தனமே காரணமாயிருக்க வேண்டுமெனச் சந்தேகிக்கப் படுகிறது.

**திரு. எம். சங்கரலிங்கம் பிள்ளை :** ஏழாயிரம் மரங்களுக்குத் தீப் பிடித்ததாகவும் சேதம் 9,000 ரூபாய் அளவிற்கு ஏற்பட்டதாகவும் சொல்லப்பட்டது. மரம் ஒன்றின் விலையே 5 ரூபாய்க்குக் குறைவில்லாமல் இருக்கிறது. எனவே சேதம் குறைத்து மதிப்பிடப் பட்டிருக்கிறது என்று நினைக்கிறேன்.

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார் :** சேதம் குறைத்து மதிப்பிடப்படவில்லை. எல்லா மரங்களும் ஒரேயடியாக எரிந்து கருகிப் போய்விடவில்லை. ஆங்காங்கே பல மரங்கள் முழுவதும் தீயால் பாதிக்கப்படாமல் இருந்தன. எனவே இந்த மாதிரியான கணக்கு வந்திருக்கிறது. எல்லா மரங்களும் ஒரேயடியாக எரிந்து கருகிப் போயிருந்தால் கனம் அங்கத்தினர் கூறுவது சரியாக இருக்கும்.

*Rubber Plantations*

* 213 *Q.*—Sri M. SANKARALINGAM PILLAI: Will the Hon. the Minister for Co-operation be pleased to state—

(*a*) whether there is any proposal to deforest the existing 5,000 acres of forests and to convert them into rubber plantations; and

(*b*) if so, the stage at which the matter now stands ?

The Hon. Sri N. S. S. MANRADIAR : (*a*) At present there is no such proposal.

(*b*) Does not arise.

*Rubber cultivation*

* 214 *Q.*—Sri M. SANKARALINGAM PILLAI: Will the Hon. the Minister for Co-operation be pleased to state—

(*a*) the extent of lands brought under rubber cultivation in Kanyakumari district; and

(*b*) the expenditure incurred year-wise from the planting stage to the final stage, per acre?

12th November 1965]

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார் :** (அ) 1964-65 முடிய இரண்டாயிரத்து முன்னூற்று எட்டு (2,308) ஏக்கர்.

(இ) 31—3—1965 அன்றுள்ளபடி, 149 ஏக்கர் பரப்பில் 1960-ல் நட்ட ரப்பர் மரங்களுக்கு ஆன மொத்த செலவு ரூ. 1,54,786. இதன்படி. ஏக்கர் ஒன்றுக்கு ரூ. 1,039 செலவாகிறது. ரப்பர் மரங்களில் நடவிலிருந்து பற்பல இனங்களுக்காக ஏக்கர் ஒன்றுக்கான செலவு விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:—

| | | ஏக்கர் ஒன்றுக்கு. |
|---|---|---|
| | | ரூ. |
| 1959–60 | முன்னேடி வேலை .. .. .. .. | 107 |
| 1960–61 | நடவு வேலை .. .. .. .. | 171 |
| 1961–62 | பராமரிப்பு .. .. .. .. | 147 |
| 1962–63 | பராமரிப்பு .. .. .. .. | 114 |
| 1963–64 | பராமரிப்பு .. .. .. .. | 298 |
| 1964–65 | பராமரிப்பு .. .. .. .. | 203 |

**திரு. எம். சங்கரலிங்கம் பிள்ளை :** இந்த மரங்கள் இப்போது பயன்தரக்கூடிய அளவிற்கு வளர்ந்துவிட்டனவா ? அப்படி இல்லாவிட்டால், அந்த நிலையை இவை அடைய இன்னும் எத்தனை ஆண்டுகள் ஆகும் ?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்ருடியார் :** பயன் தருவதற்கு குறைந்தது எட்டு ஆண்டுகளாவது ஆகும். இவையெல்லாம் 1960-ஆம் ஆண்டில் தான் நடப்பட்டன. எனவே இவை நடப்பட்டு ஐந்து வருஷங்கள் தான் இப்போது ஆகியிருக்கின்றன.

*Reserve and private forests in Kanyakumari district*

*215 Q.—SRI M. SANKARALINGAM PILLAI : Will the Hon. the Minister for Co-operation be pleased to state— 3–20 p.m.

(a) the extent of (i) Reserve forest and (ii) Private forest in Kanyakumari district; and

(b) the amount realised every year from 1962 by way of auctioning the rights for the extraction of timber in the Reserve Forests?

THE HON. SRI N. S. S. MANRADIAR : (a) (i) One hundred and seventy-eight (178) square miles and three hundred and sixty-six (366) acres.

(ii) There is no private forest classified as such in Kanyakumari district.

(b) The amounts realised by auctioning the rights of extraction of growth left after departmental extraction of good timber are as follows :—

1962–63—Rupees six lakhs, fifty-nine thousand five hundred and twenty-five (Rs. 6,59,525).